27-12-41

132

உ
சிவமயம்

# திருஅச்சிறுபாக்கத் தல வரலாறு




இந்நூல் எழுதியவர் :

**G. கலியாணம் பிள்ளை,** B. A., Dip. Econ.



வெளியிட்டவர் :

**பெனுகொண்ட - தனபால் செட்டியார்,**

அச்சிறுபாக்கம்.

1941

# முகவுரை

சைவ சமயம் இன்றுள்ள நிலையில் இருப்பதற்கு மிக முக்கிய காரணங்களாக உள்ளவை சைவ நூல்களும், சிவாலயங்களுமேயாம். ஆலயங்களை மௌன மதப்பிரசாரகர்கள் (Silent Missionaries) என்று கூறலாம். அவைகளில் பாடல் பெற்றவைகளைச் சிறந்தனவாகக் கொள்கின்றனர். அவ்வாறு பாடல் பெற்ற பதியான திருஅச்சிறுபாக்கப் பெருமையைப்பற்றிக் கூற எழுந்ததே இச்சிறு நூலாகும். இப்பணியை என்னை மேற்கொள்ளச் செய்தவர்கள், சென்னை அறநிலையப் பாதுகாப்பு மன்ற உறுப்பினர் (Commissioner, H. R. E. Board) திரு. இராவ் பகதூர் C. M. **இராமச்சந்திர செட்டியார்**, B.A.,B.L.,F.R.G.S. அவர்கள் ஆவார்கள். மேலும் அவர்களே முகப்புப் படத்திற்கு வேண்டிய புகைப்படமும், கல்வெட்டுக் குறிப்புகளும் தொகுத்துக் கொடுத்து உதவினார்கள். இந்நூலை அச்சிட்டு வெளியிட்டவர் திரு. பெனுகொண்ட - தனபால் செட்டியார் அவர்கள். அவர்களை அப்பணியில் ஊக்கியவர் எனது கெழுதகை நண்பர் பருக்கல் - திரு. K. V. புருஷோத்தம ரெட்டியார் அவர்களே. இவர்களுக்கு எனது நன்றியறிதலான வணக்கம் உரித்தாகுக. இந்நூலை இன்று இங்கு கூடிய சைவ சித்தாந்த மகாசமாஜக் கூட்டத்தில் ஆட்சி கொண்ட நாதர் அடியிணை மலர்களில் சமர்ப்பிக்கிறேன்.

திருஅச்சிறுபாக்கம்
விஷு ௵ வைகாசி ௴ 26௳
(8—6—41)

G. **கலியாணம்**

7914

உ

சிவமயம்

# திருஅச்சிறுபாக்கத் தல வரலாறு

" மூர்த்திதலந் தீர்த்தம் முறையாத் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''

—தாயுமானவர்

## தலமும் இருப்பிடமும்

**தொ**ண்டைநாடு சான்றோருடையதென ஆன்றோர் கூறும் பண்டைப்பெருமை வாய்ந்தது. அந்நாட்டில் பாடல்பெற்ற சிவத்தலங்கள் முப்பத்திரண்டு. அவைகளில் ஒன்று திருஅச்சிறுபாக்கம். இத்தலம் செங்கற்பட்டு ஜில்லா மதுராந்தகம் தாலுகாவில் உள்ளது. அச்சரப்பாக்கம் என்ற தென் இந்திய இருப்புப்பாதை நிலையத்திலிருந்து தென் மேற்கே அரை மைல் தொலைவி லுள்ளது. " ஜயங்கொண்ட சோழமண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்து மதுராந்தக சதுர்வேதி மங்கலத்துத் தென்பால் தனியூர் திருஅச்சிறுபாக்கம்" என அவ்வூர்க் கோயிலிலுள்ள கல்வெட்டுக்களில் கூறப்படுகிறது. சென்னையிலிருந்து தெற்கு நோக்கிச் செல்லும் பெருங் கற்சாலையில் (Great Southern Trunk Road) 58-வது மைலில் இவ்வூர் உளது.

## கோயிலின் அமைப்பு

கோயில் ஊருக்குக் கீழ்பால் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோபுரமொன்று கோயிலின் வாயிலை

அழகுபெறச் செய்கிறது. கோயிலின் பரப்பு சுமார் 37,000 சதுர அடி. கீழ்மேல் மதில் நீளம் சுமார் 265 அடி ; தென்வடல் மதில் நீளம் சுமார் 140 அடி. கோயிலில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன.

### தலத்தின் வேறு பெயர்கள்

அச்சரப்பாக்கம் என்பது வழங்குகிற பெயர். 'அச்சிறுபாக்கம்' எனக் கல்வெட்டுக்களிலும் தேவாரத்திலும் காணப்படுகிறது. பாக்கபுரி, பாக்கபுரம் என்ற வேறு பெயர்களுமுண்டு.

### மூர்த்திகள்

இத்தலத்து உறையும் இறைவனுக்குப் பாக்கபுரேசுரர், ஆட்சீசர் என்னும் பெயர்களும், அம்பிகைக்குச் சுந்தரநாயகி, பாலசுகாம்பாள், இளங்கிளி மொழியம்மை, அதிசுந்தரமின்னுளம்மை என்னும் பெயர்களும் அமைந்துள்ளன. சம்பந்தர் அருளிய தேவாரத்தில் சுவாமி அம்பிகை இவர்களை ஆட்சிகொண்டார், இளங்கிளையரிவை என்றும் கூறுகின்றார். கல்வெட்டுக்களில் "திருவச்சிறு பாக்கமுடையார் ஆட்சிகொண் டருளியமகாதேவர்" என்றும், "இளங்கருணைப் பாவை" என்றும் காணப்படுகின்றன. கோயிலின் மூலத்தானமாக இரண்டு ஆவுடையார்கள் இருக்கின்றன. சுயம்பு மூர்த்திக்கு 'எமையாட்சீசர்' என்றும், மற்றதற்கு 'உமை ஆட்சீசர்' என்றும் பெயர்கள் வழங்குகின்றன. உமையாட்சீசர் கோபுர வாயிலுக்கு நேரே இருக்கிறார். சுயம்புமூர்த்தி வாயிலுக்குச் சற்றுவடபுறம் விலகி இருக்கிறார். அவருக்கு நேரேயே நந்தியும், கொடிக்கம்பமும் உள்ளன.

கோயிலின் உட்பிரகாரச் சுற்று மாளிகையில் தென்புறம் நால்வர், சத்த கன்னியர் (ஆறு உருவங்களே

இருக்கின்றன.) மேல்புறம் விநாயகர், பழநியாண்டவர், ஆறுமுகசுவாமி, வடபால் நடராசர், சிவகாமசுந்தரி, கீழ்பால் சூரியன், பைரவர் இவர்களுடைய விக்கிரகங்களும் காணப்படுகின்றன.

### தீர்த்தங்கள், தலவிருட்சம்

இத்தலத்தின் தீர்த்தம் தேவதீர்த்தம் என்பர். கோயிலுக்குச் சிறிது வடமேற்கே சங்க தீர்த்தம் என்ற ஒன்று இருக்கிறது. கோயிலுக்குள் சிங்க தீர்த்தம் இருக்கின்றது. கோபுர வாயிலுக்கெதிரில் தேர் நிலைக்கு அருகில் ஒரு சிறு திருக்குளமும் உண்டு. கொன்றை மரம் இத்தல விருட்சம். அது கோயிலின் வடபிரகாரத்திலுள்ளது.

### பிற கோயில்கள்

ஆலயத்தின் வெளிப்பிரகாரத்தில் அம்பிகை சந்நிதியும், நவக்கிரகங்களும் இருக்கின்றன. ஊருக்கு மேற்பால் அமைந்துள்ள சுமார் நான்குமைல் நீளமுள்ள மலைத்தொடரின் நடு உச்சியில் ஒரு சிறு கோயில் பாழடைந்திருக்கிறது. ஒரு பெரிய சிவலிங்கம் அங்கிருக்கின்றது. மலைத்தொடரின் வடகிழக்கு மூலையில் பாறையின்மேல் ஒரு ஆவுடையார் காணப்படுகிறது. மலைத்தொடர் தென்கோடியில் சிறு குன்றின்மேல் திருமுருகன் கோயில் ஒன்று அமைந்திருக்கிறது. அத்தலம் பெரும்பேர் என வழங்கும் பேறைநகர் ஆகும். திரிபுவன நல்லூர் என்ற பேரும் உண்டு. அருணகிரிநாதரின், "நீல மயில்சேரு..." என்ற தொடக்கத்த திருப்புகழ் பாடல் பெற்ற பெருமை வாய்ந்தது. தண்டபாணி சுவாமிகளும், பாம்பன் சுவாமிகளும் இக்கோயில் முருகனைப் பாடியிருக்கின்றனர். பிள்ளைத் தமிழும் ஒன்

†

றிருக்கிறது. ஆண்டுக்கு இருமுறை அச்சிறுபாக்கத்தி னின்றும் ஆட்சீசர் அங்கு எழுந்தருளி, அகத்தியனுருக் கும், சம்பந்தருக்கும் காட்சி வழங்குகிறுர். அங்கிருந்தே மலையையும் இவ்விரு தடவைகளில் சுற்றி வருகின்றுர். முருகன் அகத்தியர்க்கு உபதேசித்தமையின் தெற்கு முகமாக மலைமேல் இருக்கின்றுர் என்று கூறுகின்றனர்.

பெரும்பேற்றில் குன்றின் மேலுள்ள குமரன் கோயிலன்றி தான்றேணீசர் கோயில், கைலாச நாதர் கோயில், எல்லையம்மன் கோயில், ஆதிகேசவப்பெருமாள் கோயில் முதலியன இருக்கின்றன. தான்றேணீசர் கோயிலில் பழைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன. மலையின் வடகோடி அடிவாரத்தில் விநாயகராலயம் ஒன்றிருக்கிறது.

## திருப்பணிகள்

(1) கலியுகாதி 4967 - குரோதன வைகாசியில் அச் சிறுபாக்கம் அழகப்ப முதலியார் குமாரர் பழனிசுவாமியா ரால் திருப்பணி தொடங்கி திருமதில், சுவாமி சந்நிதானம், அம்மன் சந்நிதானம், துவஜஸ்தம்பம், ஸ்தூபிகள், வாகன சாலை, யாகசாலை, மடைப்பள்ளி முதலியன முடிவடைந்து பிரஜோற்பத்திஞு (1871 கி. பி.) வைகாசிமீ 23உ ஞாயிற்றுக்கிழமை கும்பாபிஷேகம் நடந்தது.

(2) கலியுகாதி 4995 - விஜயஞு வைகாசிமீ 24உ திங்கட்கிழமை சிறுக்காரணை - பொற்பாத செட்டியாரால் துவஜஸ்தம் ஸ்தாபிக்கப்பட்டது.

(3) சௌமியஞு ஆவணிமீ கோபுரத் திருப்பணி பூர்த்தியாகி கும்பாபிஷேகம் ஜமீன் கயப்பாக்கம் - முத்து வேங்கடபதி ரெட்டியாரால் நடத்தப்பட்டது.

(4) சந்திரசேகரர் விக்கிரகம் ஷெயூர் பெ. மன்னுர் செட்டியார் குமாரர் அரங்கசாமிச் செட்டியாராலும், சம்பந்தர் விக்கிரகம் ஷெ மன்னுர் செட்டியார் குமாரர்

தனபால் செட்டியாராலும், திருநாவுக்கரசர் விக்கிரகம் ஷை மன்னர் செட்டியார் மனைவி - சாலாவதி அம்மையாராலும் செய்து வைக்கப்பட்டன.

(5) தொழுப்பேடு - முத்துசாமி ரெட்டியாரால் கல்யாண மண்டபம் கட்டப்பட்டது.

## தலப் பெருமைகள்

இத்தலத்து மூலலிங்கம் சுயம்பு மூர்த்தி. கர்ப்பக்கிரகத்தின் முன்புறமுள்ள அந்தராளத்தில் ஆவுடையார்க்கு முன்னால் சுமார் 8 அடி ஆழமுள்ள கிணறோ அல்லது சுரங்கமோ ஒன்று கற்களால் மூடப்பட்டிருக்கிறது. அது அங்கு ஏற்பட்டதன் காரணம் விளங்கவில்லை. சம்பந்தர் திருக்கழுக்குன்றத்திலிருந்து அச்சிறுபாக்கம் வந்து அடியார் கூட்டத்துடன் சில நாட்கள் தங்கியிருந்தார் எனப் பெரியபுராணம் கூறுகின்றது. இத்தலத்திற்குச் சம்பந்தர் பாடிய பதிகம் (11 பாடல்கள்) ஒன்று உண்டு. அப்பர் க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகத்தில் "எச்சில் இளமர்" என்று தொடங்கும் பாசுரத்தில் 'அச்சிறுபாக்கம்' என்று கூறியிருக்கிறார். மாணிக்கவாசகர் திருவாசகம் திருவுந்தியாரில் மூன்றுவது பாட்டில் "தச்சு விடுத்தலுந் தாமடியிட்டலும், அச்சுமுறிந்ததென் றுந்திபற, அழிந்தன முப்புரம் உந்திபற" என்று கூறியிருப்பது இத்தலத்தில் அச்சுமுறிந்த வரலாற்றைக் குறிப்பதாகக் கொள்ளலாம். வடலூர்-இராமலிங்க சுவாமிகள் விண்ணப்பக் கலிவெண்பாவில் தொண்டை நாட்டுப்பதிகளைக் கூறும்போது "துன்னு பொழில் அம்மதுரத்தேன் பொழியும் அச்சிறுபாக்கத்துலகர் தம்மத நீக்குஞ் ஞான சம்மதே" என்று கூறியிருக்கிறார்.

## திருவிழாக்கள்

கீழ்க்காணு முறையில் இத்தலத்தில் திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

**சித்திரை** :—பிரமோற்சவம் - ஐந்தாம் நாள் விழாவில் திருக்கல்யாணமும், இடபவாகனக் காட்சியும், ஏழாம் நாள் கொன்றையடியில் திரிநேத்திர தாரிக்காட்சியும் மிகச்சிறப்பாக நடைபெறுகின்றன. பதினோராம் நாள் சுவாமி பெரும்பேற்றிற் கெழுந்தருளி அங்கு முருகப் பெருமானுடன் அகத்திய முனிவருக்குக் காட்சிதந் தருளி, திருமலையைச் சுற்றிவருகிறார். இம்மாதத்தில் அப்பர் சுவாமிகள் உற்சவமும் 10-நாட்கள் நடைபெறுகின்றது. இரண்டு நாட்களில் சைவப் பிரசங்கங்கள் நிகழ்கின்றன.

**வைகாசி** :—சம்பந்தர் திருவிழா - 10 நாட்களிலும் சம்பந்தர் புராணம் முறையாகப் பிரசங்கிக்கப்படுவதுடன், ஓடம்விடல், எலும்பைப் பெண்ணுக்கல், சோதியிற் கலத்தல் முதலிய சில பாகங்களைக் காட்சியாகக் காட்டப்படுகின்றது.

**ஆவணி** :—விநாயகர் சதுர்த்தி விழா.

**புரட்டாசி** :—நவராத்திரி விழாவில் ஒரு நாள் பாரிவேட்டையில் வன்னியில் அம்பெய்தல் காட்சியுண்டு.

**ஐப்பசி** :—கந்தர் சஷ்டி வீதிவிழா.

**கார்த்திகை** :—நான்கு சோமவாரங்களில் அபிஷேகமும், கிருத்திகையன்று தீபக்காட்சியும் நடைபெறுகின்றன.

**மார்கழி** :—10 நாள்கள் மாணிக்கவாசகர் திருவிழா. திருவாதிரைத் திருநாளிலும் விழாவுண்டு.

**தை** :—இம்மாத மூன்றும் நாள் சுவாமி பெரும்பேற்றிற்குச் சென்று சம்பந்தர்க்குக் காட்சி கொடுத்துப் பின்னர் மலைசுற்றி வருகிறார்.

அப்பர் சம்பந்தர் திருவிழாக்களே உபயகர்த்தர்கள் உதவியைக் கொண்டு அச்சிறுபாக்கம் பெ. அய்யலு செட்டியார் 1925-ஆம் ஆண்டு முதல் நடத்தி வருகிருர்.

## ஆலய நிர்வாகம்

கோயிலுக்குச் சொந்தமாக பள்ளிப்பேட்டை என்ற சுரோத்திரிய கிராமம் ஒன்று இருக்கின்றது. அதுவேயன்றி அச்சிறுபாக்கத்தில் கொஞ்சம் நிலமும், சிறுக்காரணேயில் கொஞ்சம் நிலமும், இடையாளம் என்ற ஊரில் சித்திரை 5-ஆம் திருநாள் நடத்துவதற்காக விடப்பட்ட நிலமும் இருக்கின்றன. பள்ளிப்பேட்டையினின்றும் ஆண்டு வருமானம் சுமார் ரூ. 1600. அச்சிறுபாக்கத்திலுள்ள தோப்பின் சந்தை குத்தகை ஆண்டுக்குச் சுமார் ரூ. 600. வருகிறது. சுமார் ரூ. 1100 மதிப்பிடக்கூடிய பொன் வெள்ளித் திருவாபரணங்கள் உள்ளன. கோயில் ஒரு தருமகர்த்தர் மேற்பார்வையில் இருக்கிறது. தற்பொழுது இந்தவூர் திரு. அப்பாய் ரெட்டியார் என்ற அ. சுப்பராய ரெட்டியார் அவர்கள் தருமகர்த்தராக இருக்கின்ருர்கள். சென்ற நூறு ஆண்டுகளிலிருந்த தருமகர்த்தர்களின் விவரங்களே இறுதியில் காண்க.

## புராண வரலாறுகளும் கர்னபரம்பரைக் கதைகளும்

திரிபுரசம்மாரத்திற்குச் சிவபெருமான் தேர் ஏறி வரும்பொழுது விநாயகரை வணங்காமல் சென்றமையால் அவர் இட்ட சாபத்தால் தேர் அச்சு முறிந்தது இத்தலத்தில் என்று கூறுகின்றனர்.

பாண்டியதேசத் தரசனெருவன் தன்னாட்டிலுள்ள தலப் பிரதிஷ்டையின் பொருட்டுக் கங்கை மணலாதிய வண்டிகளிலேற்றிக் கொண்டு வரும்போது, அவை இத்தலத்தருகில் வந்து மேல் செல்லாது நின்றுவிடவும்,

ஊக்கிச் செலுத்த அச்சுகள் முறிந்தனவென்றும்,பின்னர் அவன் அசரீரியால் விஷயமறிந்து திருப்பணி செய்தான் என்றும் ஒரு கதை வழங்குகிறது. வண்டிகள் நின்று அச்சு முறிந்த இடம் வண்டிக்குப்பம் என இப்போதும் வழங்குகிறது.

மதுரையில் வையையாற்றின் வெள்ளத்தை அணை போட்டுத் தடுப்பதற்காகக் கங்கையிலிருந்து மணல் கொண்டு வரும்படி பாண்டியன் ஒருவன் மந்திரி முதலியோரை அனுப்பினன். மணல் ஏற்றிவந்த வண்டிகளின் அச்சுகள் இவ்வூர்க் கருகாமையில் முறிந்துவிட்டன. வேடர்கள் சிலர் அந்த அமைச்சனிடம் கொன்றை மரத்தடியிலுள்ள புற்று ஒன்றின்மேல் பசுவொன்று நடுப் பகலில் பால்சொறிவதாகச் சொன்னர்கள். அதைக் காண அமைச்சன் சென்றான். அங்கு பொன்போன்ற உடும்பு ஒன்று புற்றில் நுழைவதைக் கண்டான்; அம் பெய்தினன்; உதிரம் புற்றினின்றும் பெருகிற்று. புற்றை அகழ்ந்து பார்க்க சுயம்புமூர்த்தியாய் சிவலிங்கம் தோன்றக் கண்டான். அதற்கு ஆலயம் கட்ட எண்ணி, தன் அரசனுக்குச் செய்தி யனுப்பினன். அரசன் பெரும பொருள் அனுப்பினன். ஆலயமும் கட்டப் பெற்றது. அதில் இரண்டு மூலத்தானங்கள். சுயம்பு மூர்த்தி யொன்று கொடிக்கம்பத் தெதிரிலுள்ளது. கோபுர வாயிலுக்கு நேரே மற்றொரு சிவலிங்கம். கும்பாபிஷேகத்திற்கு வந்த அரசன் அமைச்சனை "இங்குளதென்ன,அங்குற்றதென்ன" என்று வினவ,சுயம்புமூர்த்தி "எமையாட்சிசர்" மற்றவர் "உமையாட்சீசர்" என்று கூறினன். இப்படியும் ஒரு கதை உண்டு. இவ்வூர்த் தேவாரத்தில் "அன்றிரண்டுருவமாய எம்மடிகள் அச்சிறுபாக்கம தாட்சி கொண்டாரே" என்பதை இக்

கதைக்கு ஆதாரமாகக் கூறுகின்றனர். "மின்திரண் டன்ன நுண்ணிடை அரிவை மெல்லியலாளையோர் பாக மாப் பேணி" என்று அதற்கு முன்னடியில் வருவதை நோக்கினுல் ஆண்டவன் உமைபாகனுக ஆண் பெண்ணு கிய இரண்டு உருவாய் இருப்பதையே குறிக்கும் என்று கொள்ள வேண்டுமென்று தோன்றுகிறது. இது ஆரா யற்பாலது.

மனைவியுடன் காசிக்குக் கங்கையாடச் செல்லும் அந்தணன் ஒருவன், மனைவி கருவுயிர்க்கு நாள் நெருங் கியதால் அவளை இவ்வூரில் விட்டுச் சென்றுன். முக்கண் ணுடைய ஒரு மகனை அவள் பெற்றுள். திரிநேத்திரதாரி என்று அவனுக்குப் பெயர். அக்குழந்தைக்கு நான்கு, ஐந்து வயதாக இருக்கும்போதே அமைச்சனைக் கோயில் இன்னின்னவாறு கட்டவேண்டும் என்று அது கூறிய தாகவும் ஒரு கதை வழங்குகிறது.

இத்தலத்தில் கண்ணுவரும், கௌதமரும் பூசித்த தாகச் சொல்லப்படுகிறது. பிரமன் பூசை செய்த திருக் குரும்பரையும், இந்திரன் வணங்கிய இந்திரனூரும் (இங் தனூர்), வருணன் பூசித்த பேறைநகரும், குபேரன் பூசனை புரிந்த திருமுக்காடும் இப்பதியைச் சார்ந்த பதிகளாகக் கூறுகின்றனர்.

## இத்தலத்தைப் பற்றிய நூல்கள்

முன் சொன்னபடி தேவாரம், திருவாசகம், திரு வருட்பா இவைகளில் கூறப்படுவதன்றி, கீழ்க்கண்ட நூல்களும் இத்தலத்தைப் பற்றிக் கூறுகின்றன :—

(1) சேக்கிழார் பெரிய புராணத்தில் திருஞானசம்பந் தர் திருக்கழுக்குன்றத்தை விட்டகன்று வந்து இத்தலத்

தைத் தரிசித்த செய்தியைப் பின்வருஞ் செய்யுட்களில் கூறி யிருக்கிறார் :—

" இன்புற்றங் கமர்ந்தருளி ஈறில்பெருந் தொண்டருடன்
மின்பெற்ற வேணியினா ரருள்பெற்றுப் போந்தருளி
என்புற்ற வணிமார்ப ரெல்லையிலா வாட்சிபுரிந்
தன்புற்று மகிழ்ந்த **திருவச்சிறுபாக்கத்** தணைந்தார்.

" ஆதிமுதல் வரைவணங்கி **ஆட்சிகொண்டா** ரெனமொழியுங்
கோதில்திருப் பதிகவிசை குலாவியபா டலிற்போற்றி
மாதவத்து முனிவருடன் வணங்கிமகிழ்ந் தின்புற்றுத்
தீதகற்றுஞ் செய்கையினார் சிலநாளங் கமர்ந்தருளி.

(2) அச்சிறுபாக்கம் - பச்சைப் பிள்ளை என்பவர் இயற்றிய " **திருப்பாமாலைகள்** " என்ற நூல் 525 செய்யுட்களுடையது. அச்சாகி இருக்கிறது.

(3) அச்சிறுபாக்கம் - எல்லப்பிள்ளை என்பவர் இயற்றிய " **பாக்கபுரி எனும் அச்சிறுபாக்கத் தலபுராணம்.**" 169 செய்யுட்களுடையது. அச்சாகி யிருக்கிறது.

(4) மேற்படி ஆசிரியர் இயற்றிய " **ஆட்சீசர் மாலை.**" மொத்த செய்யுட்கள் 102. இன்னும் அச்சுவாகனம் ஏறவில்லை.

(5) சென்னை - பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்ப் பண்டிதர் க. வ. திருவேங்கட நாயடு இயற்றிய " **ஆட்சிகொண்டநாதர் தோத்திரம்** "—10 பாடல்கள்.

(6) மேற்படி ஆசிரியர் இயற்றிய " **இளங்கிளிமொழியம்மை பஞ்சகம்** "—5 செய்யுட்கள். இவ்விரண்டு நூல்களும் அச்சாகி இருக்கின்றன.

(7) மோசூர் முனிசாமி முதலியார் இயற்றிய " **ஆட்சிகொண்டநாதர் பதிகம்** "—11 பாடல்கள். அச்சாகியிருக்கின்றன.

(8) கயப்பாக்கம் - சதாசிவ செட்டியார், பி. ஏ. தம்முடைய " திராவிட வேதத்திரட்டு " என்னும் நூலில் அச்

சிறுபாக்கத்தைப்பற்றி மிகச் சுருக்கமான வரலாறு எழுதியிருக்கிருர்.

## பிற குறிப்புகள்

இவ்வூர் ஜனத்தொகை சுமார் 2000. கைத்தறி நெசவுத் தொழில் உண்டு. ஞாயிறுதோறும் சந்தை கூடுகிறது. சப்ரிஜிஸ்திரார் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், போஸ்ட் தந்தி ஆபீஸ், கிராமச் சாவடி இவைகள் இருக்கின்றன. ஒரு சத்திரமும், பிரயாணிகள் தங்குமிடம் (Travellers' Bungalow) ஒன்றும் இருக்கின்றன.

## கல்வெட்டுகள்

இந்த ஆலயத்தில் நாளது வரை 30 கல்வெட்டுகள் கண்டு பிடித்திருக்கிருர்கள். அவை கோபுரத்தின் வடகுடவறையிலும், கர்ப்பக்கிரக முன்மண்டபச் சுவர்களிலும், கர்ப்பக்கிரகச் சுவர்களிலும் இருக்கின்றன. அவைகளை அரசாங்கத்தார் "தென் இந்திய சிலாசாசனங்கள்" ஏழாவது புத்தகத்தில் எண் 447 முதல் 476 வரை பதிப்பித்திருக்கிருர்கள். அக்கல்வெட்டுகள் சோழர், பாண்டியர், விஜயநகரத்தார் அரசாட்சிகளில் ஏற்பட்டவைகள். சோழர்களில் வீரராஜேந்திரன் 5-ம் ஆண்டு, இராஜேந்திரன் 3-ம் ஆண்டு, குலோத்துங்கன் I 9, 42, 43, 49-ம் ஆண்டுகள், விக்கிரமசோழன் 6, 7-ம் ஆண்டுகள், குலோத்துங்கன் III 3, 5, 12, 15, 35-ம் ஆண்டுகள், இராஜராஜன் III 3, 3, 18-ம் ஆண்டுகள் இராஜநாராயண சம்புவராயன் 18-ம் ஆண்டு குறித்த கல்வெட்டுக்களும், பாண்டியர்களில் விக்கிரம பாண்டியன் 3, 3, 4, 5-ம் ஆண்டுகள், வீரபாண்டியன் 7-வது ஆண்டு, சுந்தரபாண்டியன் 13-ம் ஆண்டு, மாறவர்மன் 13-ம் ஆண்டு குறித்த கல்வெட்டுக்களும், விஜயநகர

மன்னர்களில் கம்பண்ண உடையார் சாலிவாகன 1283-ம் ஆண்டு, வீரபுக்கண்ண உடையார் சாலிவாகன 1298-ஆம் ஆண்டு, சாளுவநரசிங்கன் கலியுக 4579-வது ஆண்டு, கிருஷ்ண தேவராயன் சாலிவாகன 1450-ஆம் ஆண்டு குறிக்கப்பட்ட கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. குலோத்துங்கன் III காலத்துக் கல்வெட்டொன்றில் ஆண்டு மறைந்து போய்விட்டது. கோனேரின்மை கொண்டான் காலக்கல்வெட்டில் ஆண்டு குறிக்கப் பெற வில்லை. ஆகவே இக்கல்வெட்டுக்கள் 11, 12, 13, 14, 15, 16-ஆம் நூற்றுண்டுகளில் ஏற்பட்டவைகள்.

இக்கல்வெட்டுக்களில் காணக்கூடிய முக்கிய செய்திகளாவன :—

சுவாமியின் பெயர் ஆட்சிகொண்ட மகாதேவர்; அம்பிகையின் பெயர் இளங்கருணைப்பாவை. நாட்டின் பெயர் ஜயங்கொண்ட சோழமண்டலம். அதன் உட் பிரிவு களத்தூர்க்கோட்டம். ஊரின் பெயர் திரு அச்சிறுபாக்கம். இவ்வூருக்கு வடக்கில் மதுராந்தக சதுர்வேதி மங்கலம் இருப்பதாகக் கண்டிருக்கிறது. அச்சிறுபாக்கம் தனியூர் என்று அறிகிறோம்.

ஓய்மாநாடு, இராஜாதி ராஜவளநாடு, விஜயராஜேந் திர சோழவளநாடு, சேவூர்நாடு, விழுப்பரையனுடு, திரு முனைப்பாடி நாடு, திருவாய்ப்பாடி நாடு, மொந்தூர்நாடு, உய்யக்கொண்ட சோழவளநாடு முதலிய நாடுகள் குறிக் கப் பட்டிருக்கின்றன.

மற்றும், களத்தூர், விராலூர், நெற்குன்றம், புளி யுண்ணி, வெள்ளரிப்பட்டு, பரகேசரிவற்றலூர், கூட லூர், முறப்பாக்கம், குட்டமங்கலம், தண்டலம், குமனிப்பாக்கம், திருவரங்க விளாகம், சித்திரமேழி நல் லூர், அமண் பாக்கம், சிற்றமண் பாக்கம், ஓடுவத்தூர்,

புத்தூர், பட்டான்பாக்கம், திருவிளாசேரி, பிறையூர், சோற்றுப்பாக்கம், பாக்கம்பாலி, உகாணே, தென்பாக்கம், சிறுபேரூர், கலிகடிந்த சோழன் சாத்தனூர், செம்பியன் சாத்தனூர், கூனன்பட்டு, வெண்கலப்பாக்கம், ஆமூர், சேவூர், முடியம்பாக்கம், கடகவட்டி, அறிந்தவன் சாத்த னூர், சிறுகடுவன் பாக்கம், வயலூர், ஓகூர், பைசாறு, அறுவர்காரணே, குளத்தூர், ஏழாயிரவேலி, சதிரப் பட்டு, காஞ்சிபுரம், வயநல்லூர், கொந்தவன்பூதூர், ஆயக்குன்றம், வீரசோழச்சேரி, மாத்தூர், முனேய தரைய நல்லூர், வளர்பிறை இராயூர், ஆனேகுந்தி முத லிய ஊர்களின் பேர்கள் காணப்படுகின்றன. இவை களில் பெரும்பாலன அச்சிறுபாக்கத்தைச் சுற்றி யுள்ளன.

இன்னும் காஞ்சிபுரம் பெருமாள் கோவில், திருவக் கீஸ்வரம், ஆனேகுந்தி கபிலேஸ்வரம், நாற்பத்தெண்ணு யிர விண்ணகர் முதலிய கோயில்களும் கூறப்பட்டிருக் கின்றன.

இனி, கல்வெட்டுகள் பெரும்பாலும் கோயில்களுக்கு அக்காலத்துப் பெரியோர்கள் செய்த தானங்களேப் பற்றி விவரமாகச் சொல்லுகிறதைப்போல் இவ்வாலயக் கல்வெட்டுக்களிலும் காணலாம். அவைகள் காலக் கிரமமாகக் கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன. கல்வெட்டுக் காலத்து அரசன் பெயர் முதலிலும், பின்னர் தானம் செய்தவர் பெயரும், அதன் பிறகு தான விவரமும் முறையே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(1) வீரராஜேந்திரன் - ஊர் பெருங்குறி மகா சபை யார் - நெல் முப்பது கலம், வேலிக்காசு, இறையிலிகாசு, நீர்விலேக்காசு, பன்மை பண்ட வெட்டி, வீரசேஷை, உகவைப் பொன், காசிப்பொன், வண்ணக்கூலி, மீன்பாட்

டம், கீழ் இறை, கால் அளவு கூலி, காவல் சேவகம், உட்பட்ட அந்தராயங்கள், கம்மாள மகமை, தரிஇறை, ஆள்வரி, திருவெழுச்சிக் குடிமை, கூத்திகால், மேல்வரி முதலிய கடமைகள் ஆட்சிகொண்ட மகாதேவர்க்கு வேண்டும் நிபந்தங்களுக்காகக் கொடுத்தது.

(2) இராஜேந்திரன் - சிறுபேரூர் வெள்ளாளன் சேக்கிழான் பழந்தை கண்ணன் - திருநந்தா விளக்கு அரைக்கு விட்ட ஆடு 45.

(3) குலோத்துங்கன் I - பன்னிருவன் - திருநந்தா விளக்கு ஒன்றுக்கு விட்ட ஆடு 96.

(4) ஷியரசன் - கலியன் சிங்கனேறன் எழுவன்- அரை விளக்குக்கு விட்ட ஆடு 42.

(5) ஷியரசன்-இன்றையிருக்கும் பள்ளி ஐயக்கிளைப் பெரியரையன் மகன் சிங்கன் - சந்தி விளக்குக்கு விட்ட ஆடு 12.

(6) விக்கிரம சோழன் - வளர்பிறை இராயூர் சோமச்சானி - நந்தா விளக்கு ஒன்றுக்குக் காசு 8.

(7) ஷி யரசன் - தென்பாக்கம் சோமங்கலவன் அருளாளப்பட்டன் - நந்தா விளக்குக்கு விட்ட ஆடு 12.

(8) குலோத்துங்கன் III - இக்கோயில் மகாமண்டபத்து முத்துப் பந்தலில் பள்ளிப்பீடத்து எழுந்தருளியிருந்து ஆட்சி கொண்ட மகாதேவர்க்கு வேண்டு நிபந்தங்களுக்கு ஆயிரக்கல நெல்லுக்குப் பல கிராமங்களைச் சேர்த்துக் ‘கலிகடிந்த சோழன் சாத்தனூர்’ என்ற ஓர் ஊராகக் கூட்டிக்கொள்ளத் திருவாய் மலர்ந்தருளினது.

(9) ஷியரசன் - வேறு சில நிலங்கள் தானம் கொடுத்தது. கோயிலில் குலோத்துங்கனுக்கு உருவம் அமைத்ததையும் குறிக்கிறது.

(10) ஷி யரசன் - செங்கேணி அம்மையப்பன் பாண்டியநாடு கொண்ட கண்டரகூளியனை இராஜராஜ சம்புவராயன் - திருவாபரணம் இரண்டு பட்டம் - ஒன்று 50 கழஞ்சு, $8\frac{3}{8}$ மாற்று; மற்றொன்று $18\frac{1}{4}$ கழஞ்சு, $8\frac{1}{2}$ மாற்று.

(11) ஷி யரசன் - அத்திமல்லனுன குலோத்துங்க சோழ சம்புவராயன் - திருவச்சிறுபாக்கம், நெற்குன்றம், இவ்வூர்ப்பிடாகைகள், புளியுண்ணி உள்ளிட்ட ஊர்களில் கண்காணியர் நெல்லும், பாடிகாவல், வெட்டி, அரி மொக்கை, எடுத்துக்கொட்டி, கோயிற்றமப்பேறு, முள்ளடி, கார்த்திகைக்காணம், ஆசுவிகள் பொதுமக்கள் பேரால் வந்த கடமையும், தரியிறையும், பாட்டமும், வாணியர் பேராலும், மன்ருடியர் பேராலும் வந்த கடமைகளும், சிகாரியப் பேறும், குற்ற தண்டமும், செட்டிறையும் உள் ளிட்ட கடமைகளும் பூசைக்கும் திருப்பணிக்குமாக விட்டவை.

(12) ஷி யரசன் - கோயில் கைக்கோளரில் பிச்சைத் தேவனுன கிடாரத்தரையன் சமய சேனுபதி - திருநந்தா விளக்குக்குக் கொடுத்த பொன் பதினேந்து.

(13) ஷி யரசன் - அம்மையப்பன் சம்புவராயன் -- திருமேற்பூச்சுக்கும், திருப்பரி சட்டத்திற்கும், அச்சிறுபாக் கத்தில் தரியிறை, தட்டாரபாட்டம், ஆசுவிகள் பொது மக்கள் பேரால் வந்த கடமை, செக்குக் கடமை முதலியவை களும்.

(14) இராஜராஜன் III - சோழ மண்டலத்துத் தென் கரை உய்யக்கொண்ட சோழ வளநாட்டுச் செல்கலிச் செல்கலுடையான் சூற்றிய தேவன் ஆட்கொண்டவில்லி யன் - சேவகப் பேற்றிலிட்டுவைத்த சந்திவிளக்கு ஒன்றுக்கு விட்ட ஆடு 12.

(15) ஷி யரசன் - ஜயங்கொண்ட சோழமண்ட லத்து ஆமூர்க்கோட்டத்து மொந்தூர்நாட்டு வெண்கலப் பாக்கத்துப் பாலமுழான் வேளான் அம்மையப்பன் - நந்தா விளக்குக்கு விட்ட எருமை 10.

(16) ஷி யரசன் - இராஜநாராயண சம்புவராயன் பாடிகாவல் நெல்லை திருமந்திர போனகத்துக்கு அமுதுபடி யாகக் கொடுத்தது.

(17) கோனேரின்மை கொண்டான் - ஆதமங்கலவன் அரையன் ஆட்கொண்ட நாயகனுன சேதிராயன் - மதுரந் தக சதுர்வேதி மங்கலத்துப்பிடாகை விராலூர் நீர் நிலம் 16 வேலி, இவ்வூர் புஞ்சை நிலம் இறையிலி தேவதான மாகக் கொடுத்தது.

(18) விக்கிரம பாண்டியன் - ஒய்மாநாடான விஜய ராஜேந்திர சோழ வளநாட்டு சேவூர்நாட்டு சேவூர் கந்த முழான் கூத்தன் திருவெண்காடு தேவனுன பல்லவராயன் - வைகாசித் திருநாளுக்கு குடி நீங்கா தேவதானமாக வெள் ளரிப்பட்டு நஞ்சைநிலமும்,ஏரிவாய்ப்புறவடையும்விட்டது.

(19) ஷை யரசன் - சிலர் - ஆயக்குன்றம் நஞ்சை புஞ்சை நிலம் விட்டது.

(20) ஷை யரசன் - தென்பாக்கப்பற்றில் நாட்டார் - புரட்டாதித் திருநாளுக்கு கம்பத்தான் வெளியான சித்திர மேழி நல்லூர் நஞ்சை புஞ்சை நிலம் கொடுத்தது.

(21) ஷை யரசன் - பூமனுன புவனவிச்சாதர தேவன்- இளங்கருணைப்பாவை நந்தவனம் செய்யும் குடிகளுக்கு... நந்தவனம் திருமண்டபத்து ஏறியருளின நாள் திருப் பாவாடை அமுது செய்தருள வேண்டுவனவுக்குவிட்ட நீர் நிலம் 2300 குழி.

(22) வீரபாண்டியன் - மதுராந்தக சதுர்வேதி மங்க லத்துக் காவல் காணியுடைய பூவடையான் மாதவராயன் முதலி செம்பியதரையன், அவன் தம்பி சொக்கன் சம்புவ ராயன் மலையமான், அவன் தம்பி தேவப்பெருமாள் மது ராந்தகப் பல்லவரையன் இம்மூவரும் - முறப்பாக்கம், குட்ட மங்கலம், தண்டலம், திருவரங்கவிளாம் இந்நான்கெல்லை களுக்குட்பட்ட நத்தம், கழனி, ஏரி, ஏரி வாய்ப்புறவடை கொல்லை, மேல் நோக்கின மரம், கீழ் நோக்கின கிணறு இவை திருநாமத்துக் காணியாகக் கொடுத்தது.

(23) சுந்தர பாண்டியன் - பெரியசானி நங்கை மகன் ஆண்டான் கண்டியதேவன் - திருவிளாசேரி, பிறையூர்,

சோற்றுப்பாக்கம், பாக்கம்பாலி, உகானே இவ்வெல்லே களுக்குட்பட்ட சிறுநாவல் நிலங்களே விட்டது.

(24) மாறவர்மன்-ஏழாயிர வேலி வடபாதி நாட்டவர்-தங்களுபயம் திருவத்யாமத் துக்கும், ஐந்து திருநந்தாவிளக்கு களுக்கும் வடபாதி சதிரப்பட்டு நீர்நிலம், புஞ்சை நிலம், திறத்துக்கொரு பசு இவைகள் விட்டது.

(25) கம்பண்ண உடையார் - பிரதானி சோமப்பர் உத்திரவுப்படி கோப்பண்ணர் - காஞ்சிபுரம் பெருமாள் கோயில் மடத்துக்குச் சில நிலங்கள் விட்டது.

(26) வீரபுக்கண்ண உடையார் - ஆட்சிசர் திருமலேச் சுற்றி வருவதற்கு ஆகவேண்டியவற்றிற்கு நிலம் விட்டது.

(27) சாளுவநரசிங்கன் - நயினர் சொக்க நயினர் - காஞ்சிபுரம் பெரிய நாயனர் மடத்துக்கு நிலம் விட்டது.

(28) கிருஷ்ணதேவராயன் - வீரநரசிம்மராய நாயக்கர் - கிருஷ்ணதேவராயர்க்குப் புண்ணியமாக ஆனேகுந்தி கபிலேஸ்வரன் சந்நிதியில் சர்வமானியமாக சோமக்கிரகண புண்ணியகாலத்தில் அரமனேக்கடுத்த முந்துடைப்பித்தைக் கொடுத்தது.

இவைகளே யன்றி குலோத்துங்கன் I, சகலேலோக சக்கரவர்தி இராஜ நாராயண சம்புவராயன் இவர்கள் காலத்திய கல்வெட்டுகள் இரண்டில் முழுவிவரங்களும் கிடைக்கவில்லே. முக்கியமான கல்வெட்டு ஒன்றுபின் வருமாறு :—

அச்சிறுபாக்கப்பற்று,தென்பாக்கப்பற்று, முலேப்பற்று ஊர்களில் செய்யாற்றில் வென்ருன், புளியுண்ணி, வெள் ளரிப்பட்டு இந்நாலூரும் நீக்கிப் பணியாள்களுக்கு ஆளுக்கு நின்ற ஊர்களில் நாட்டார் உபயமாகக் கைக்கொண்டபடி திருமலேப் பிதக்கணம் பாடி வேட்டை நடத்துவதாகக் கைக்கொண்டு எங்களுக்குத் தந்த திருமுகப்படிக்கு நாங்கள் நடத்தும்படி திருமலேயில் நாலு திருவீதியும் 30 அடிக்கு 30 அடி கட்டையும் முள்ளும் பறித்து, ஆறுதிரு

மடமும் கட்டி, காவணமும் இட்டு, மணலும் பரப்பி, திருமேற் கட்டியும் கட்டி, திருமஞ்சனக்குடம், சால், கரகம், எரிகரும்பு இவையும் வேண்டுவன குறைவறுத்து இந்த உபயத்துக்கு அமுதுபடி, கறியமுது, உப்பமுது, மிளகமுது, பால் நெய் அமுது, அடைக்காய் இலை அமுது, வெச்ச அமுது, பிட்டமுது, திருப்பணியாரம், மற்றும் அதற்கு வேண்டும் பல பண்டங்களும் திருப்பரிவட்டம்,திருச்சாந்து, திருமேற்பூச்சு, திருவிளக்கு எண்ணெய், திருப்பள்ளித் தாமம், தானத்தார், பூசிக்கும் நம்பிமார், ஸ்ரீ மாகேசுவரக் கணக்கு, மாகேசுவரர், ஊரவர், தேவரடியார் இவர்கள் பெறும் ஒடுக்கும் பரிவட்டம், திருமெய் காவல், மற்றுச் சாத்துங்கூலி, சிபாதம் தாங்குவார் கூலி, பணியாள் விளக்காள் கூலி...

மேலே கூறிய கல்வெட்டுக்களால் நம் நாட்டு அரசர், பொதுமக்கள் முதலியோர் கோயில்களைப் பரிபாலித்த முறையும், பலவித வரிகள் ஏற்படுத்தியிருந்ததையும், நாட்டுப் பிரிவினைகளும், சுவாமி எழுந்தருளச் செய்வதற்குச் செய்திருந்த ஏற்பாடுகளும் மற்றும் பல விவரங்களையும் அறிகிறோம். தமிழ் மக்களின் நாகரிகத்தின் மாட்சி என்னே!

## ஆலய தருமகர்த்தர்கள்

1842-ஆம் ஆண்டு வரையில் அரசாங்கத்தார் தரப்பில் விசாரணையில் இருந்தது.

1843—1866 பள்ளிப்பேட்டை - ஐயாசாமிப் பிள்ளை, அச்சிறுபாக்கம் - தாண்டவராயப் பிள்ளை.

1867—1879 பள்ளிப்பேட்டை - ஐ. வெள்ளையப் பிள்ளை.

1880—1890 தேவஸ்தான கமிட்டி ஏற்பட்டு அச்சிறுபாக்கம் - எல்லப் பிள்ளை, முருகப்ப முதலியார், சுப்பராய முதலியார், பழனி சுவாமியார், பள்ளிப்பேட்டை-அருணசலம் பிள்ளை இவர்கள் நியமிக்கப்பட்

டார்கள். பழனி சுவாமியார் சில திருப்பணிகள் நடத்தினுர். மற்ற நால்வரும் விலகிவிட்டார்கள்.

1891—1896 கமிட்டியாரால் அச்சரப்பாக்கம் - ஆதிசேஷப் பிள்ளை, இந்தளூர் - கொண்டாரெட்டியார் இவர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் காலத்தில் சில சீர்திருத்தங்களை நடத்தினுர்கள்.

1897—1902 கமிட்டியார் அ. கிருஷ்ணராயர் என்பவரைச் சம்பள தருமகர்த்தராக நியமித்தார்கள்.

1903—1913 பள்ளிப்பேட்டை சந்திரசேகரம் பிள்ளை. அவர் காலத்தில் சில சீர்திருத்தங்கள் செய்தார்.

1913-ல் இந்தளூர் - அ. சுப்பராய ரெட்டியார் நியமிக்கப்பட்டு நாளது வரை தருமகர்த்தராக இருந்து வருகிருர்.



திருஞானசம்பந்தர்

திருஅச்சிறுபாக்கம் : பண் - குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

பொன்றிரண்டன்ன புரிசடைபுரளப்
பொருகடற்பவளமொ டழல்நிறம்புரையக்
குன்றிரண்டன்ன தோளுடையகலங்
குலாயவெண்ணூலொடு கொழும்பொடியணிவர்

மின்றிரண்டன்ன நுண்ணிடையரிவை
மெல்லியலாளேயோர் பாகமாப்பேணி
அன்றிரண்டுருவ மாயவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. க

தேனினுமினியர் பாலனநீற்றர்
தீங்கரும்பனேயர்தந் திருவடிதொழுவார்
ஊன்நயந்துருக உவகைகள்தருவா
ருச்சிமேலுறைபவ ரொன்றலாதூரார்
வானகமிறந்து வையகம்வணங்க
வயங்கொளநிற்பதோர் வடிவினேயுடையார்
ஆனையினுரிவை போர்த்தவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. உ

காரிருளுருவ மால்வரைபுரையக்
களிற்றினதுரிவைகொண் டரிவைமேலோடி
நீருருமகளே நிமிர்சடைத்தாங்கி
நீறணிந்தேறுகந் தேறியநிமலர்
பேரருளாளர் பிறவியிற்சேரார்
பிணியிலர்கேடிலர் பேய்க்கணஞ்சூழ
ஆரிருண்மாலே யாடுமெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. ங

மைம்மலர்க்கோதை மார்பினரெனவு
மலைமகளவளொடு மருவினரெனவுஞ்
செம்மலர்ப்பிறையுஞ் சிறையணிபுனலுஞ்
சென்னிமேலுடையரெஞ் சென்னிமேலுறைவார்
தம்மலரடியொன் றடியவர்பரவத்
தமிழ்ச்சொலும்வடசொலுந் தாணிழற்சேர
அம்மலர்க்கொன்றை யணிந்தவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. ச

விண்ணுலாமதியஞ் சூடினரெனவும்
விரிசடையுள்ளது வெள்ளநீரெனவும்
பண்ணுலாமறைகள் பாடினரெனவும்
பலபுகழல்லது பழியிலரெனவும்

எண்ணலாகாத இமையவர்நாளு
மேத்தரவங்களோ டெழில்பெறநின்ற
அண்ணலானூர்தி யேறுமெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. ரு

நீடிருஞ்சடைமே லிளம்பிறைதுளங்க
நிழல்திகழ்மழுவொடு நீறுமெய்பூசித்
தோடொருகாதினிற் பெய்துவெய்தாய
சுடலையிலாடுவர் தோலுடையாகக்
காடரங்காகக் கங்குலும்பகலுங்
கழுதொடுபாரிடங் கைதொழுதேத்த
ஆடரவாட ஆடுமெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. சு

ஏறுமொன்றேறி நீறுமெய்பூசி
யிளங்கிளையரிவையொ டொருங்குடனுகிக்
கூறுமொன்றருளிக் கொன்றையந்தாருங்
குளிரிளமதியமுங் கூவிளமலரும்
நாறுமல்லிகையு மெருக்கொடுமுருக்கு
மகிழிளவன்னியு மிவைநலம்பகர
ஆறுமோர்சடைமே லணிந்தவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. எ

கச்சுமொள்வாளுங் கட்டியவுடையர்
கதிர்முடிசுடர்விடக் கவரியுங்குடையும்
பிச்சமும்பிறவும் பெண்ணணங்காய
பிறைநுதலவர்தமைப் பெரியவர்பேணப்
பச்சமும்வலியுங் கருதியஅரக்கன்
பருவரையெடுத்ததிண் டோள்களையடர்வித்
தச்சமுமருளுங் கொடுத்தவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. அ

நோற்றலாரேனும் வேட்டலாரேனும்
நுகர்புகர்சாந்தமொ டேந்தியமாலைக்
கூற்றலாரேனு மின்னவாறென்று
மெய்தலாகாததொ ரியல்பினையுடையார்
தோற்றலார்மாலு நான்முகமுடைய
தோன்றலு மடியொடு முடியுறத்தங்கள்
ஆற்றலாற்காணு ராயவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. கூ

வாதுசெய்சமணுஞ் சாக்கியப்பேய்கள்
நல்வினைநீக்கிய வல்வினையாளர்
ஓதியுங்கேட்டு முணர்வினையிலாதா
ருள்கலாகாததோ ரியல்பினையுடையார்
வேதமும்வேத நெறிகளுமாகி
விமலவேடத்தொடு கமலமாமதிபோல்
ஆதியுமீறு மாயவெம்மடிக
ளச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. ௧0

மைச்செறிகுவளை தவளைவாய்நெறிய
மதுமலர்ப்பொய்கையிற் புதுமலர்கிழியப்
பச்சிறவெறிவயல் வெறிகமழ்காழிப்
பதியவரதிபதி கவுணியர்பெருமான்
கைச்சிறுமறியவன் கழலலாற்பேணுக்
கருத்துடைஞானசம் பந்தனதமிழ்கொண்
டச்சிறுபாக்கத் தடிகளையேத்து
மன்புடையடியவ ரருவினையிலரே. ௧௧

## பெரும்பேறு - திருப்புகழ்

நீலமயில் சேருமந்தி மாலைநிக ராகியந்த
காரமிக வேநிறைந்த குழலாலும்
நீடுமதி ரேகவின்ப மாகியச லாபசந்த்ர
னேர்தருமு காரவிந்த மதனுலும்
ஆலினிக ரானவுந்தி யாலுமட வார்கள் தங்கள்
ஆசைவலை வீசுகெண்டை விழியாலும்
ஆரமணி பூணணிந்த மார்பின்முலை யாலுநெஞ்சு
ளாகிமயல் நானுழன்று திரிவேனோ
கோலவுரு வாயெழுந்து பாரதனை யேயிடந்து
கூவிடுமு ராரிவிண்டு திருமார்பன்
கூடமுறை நீடுசெம்பொன் மாமதலை யூடெழுந்த
கோபவரி நாரசிங்கன் மருகோனே
பீலிமயில் மீதுறைந்து சூரர்தமை யேசெயங்கொள்
பேர்பெரிய வேல்கொள்செங்கை முருகோனே
பேடைமட வோதிமங்கள் கூடிவிளை யாடுகின்ற
**பேறைநகர்** வாழவந்த பெருமாளே.

திருச்சிற்றம்பலம்.

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை

